AL/2016/47/T-I





அධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2016 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2016 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2016

ඉස්ලාම් ශිෂ්ටාචාරය I
இஸ்லாமிய நாகரிகம் I
Islamic Civilization I

47 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள் :**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
* விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
* **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி (×)** இடுவதன் மூலம் காட்டுக.

**1.** பின்வருவனவற்றுள் மிகச் சரியான கூற்றைத் தெரிவுசெய்க.
(1) 'இக்ர:. பிஸ்மி ரப்பிகல்லதீ ஹலக்' என்ற அல்-குர்ஆன் வசனம் ஹிறாக் குகையில் வைத்து அருளப்பட்டதாகும்.
(2) இஸ்லாமிய அரசியல் ஒழுங்கில் இறைமை அதிகாரத்தை ஆட்சித் தலைவர்கள் பெற்றிருப்பர்.
(3) காதியானிகள், ஸஹாபாக்கள் காலத்தில் போலி நபித்துவம் பற்றிப் பிரசாரம் மேற்கொண்டோராவர்.
(4) 'தாருல் உலூம்' எனும் பெயரிலான ஆய்வு நிறுவனத்தைக் கலீபா ம:.மூன் விரிவுபடுத்தினார்.
(5) ஸைத் பின் ஹாரிதா (ரழி), அல்-குர்ஆன் தொகுப்பில் பங்கெடுத்த ஸஹாபாக்களுள் ஒருவராவார்.

**2.** கொழும்பில் வாழ்ந்த முஸ்லிம்கள் கி.பி. 1526 இல் போர்த்துக்கேயரால் வெளியேற்றப்பட்டபோது அவர்களுக்கு சீதாவாக்கைப் பிரதேசத்தில் அடைக்கலம் வழங்கிய சிங்கள மன்னன்
(1) விமலதர்மசூரியன்
(2) மாயாதுன்னை
(3) செனரத்
(4) புவனேகபாகு
(5) ஸ்ரீ விக்கிரமராஜசிங்கன்



**3.** பிக்ஹுக் கலைக்குப் பெரும் பங்காற்றிய பிரதான நான்கு இமாம்களும் முஸ்லிம் சமூகத்தாரிடையே மிகவும் பிரசித்தமானவர்களாவர். அவர்களின் மூப்பு ஒழுங்கைப் புலப்படுத்தும் சரியான தொகுதி
(1) இமாம் மாலிக், இமாம் அபூஹனீபா, இமாம் ஷாபிஈ, இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல்
(2) இமாம் அபூஹனீபா, இமாம் மாலிக், இமாம் ஷாபிஈ, இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல்
(3) இமாம் அபூஹனீபா, இமாம் ஷாபிஈ, இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல், இமாம் மாலிக்
(4) இமாம் ஷாபிஈ, இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல், இமாம் அபூஹனீபா, இமாம் மாலிக்
(5) இமாம் மாலிக், இமாம் அபூஹனீபா, இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல், இமாம் ஷாபிஈ

**4.** பின்வருவனவற்றுள் 'சகோதரத்துவம்' என்பதைப் புலப்படுத்தும் அரபுப் பதம் யாது ?
(1) அல்-ஜமாஅத்
(2) அல்-முஆ:.ஹாத்
(3) அல்-ஹழாரத்
(4) அல்-இமாரத்
(5) அல்-வராஸத்

**5.** சுமார் ஐந்து நூற்றாண்டுகள் நீடித்த அப்பாஸிய கிலாபத் கி.பி. 1258 இல் வீழ்ச்சியடைந்தமைக்குக் காரணமானவர்கள்
(1) சிலுவை வீரர்கள்
(2) மஜூஸிகள்
(3) ஸபவியர்கள்
(4) மங்கோலியர்கள்
(5) கஸ்னவீக்கள்

**6.** இலங்கை முஸ்லிம்களிடையே வெளியாகிய பத்திரிகைகளில் 'அஸ்-ஸவாப்' என்ற பத்திரிகையின் ஆசிரியர்
(1) W. M. அப்துல் ரஹ்மான்
(2) I. L. M. A. அஸீஸ்
(3) வாப்பிச்சி மரிக்கார்
(4) M. T. அக்பர்
(5) மாப்பிள்ளை லெவ்வை ஆலிம்

**7.** மக்காவில் குறைஷியரின் கொடுமைக்கு அஞ்சி தாயிப் சென்ற நபியவர்கள் அங்கும் கசப்பான அனுபவத்தையே பெற்றுக்கொண்டார்கள். அங்கிருந்து மக்கா மீண்ட நபியவர்களுக்கு அடைக்கலம் வழங்கிய நபர்
(1) அதீ பின் ஹாதிம் (2) உமையா பின் ஹலப் (3) வலீத் பின் முகீரா
(4) ஸப்வான் பின் உமையா (5) முத்இம் பின் அதீ

**8.** கீழே **X** நிரலில் சில நூல்களின் பெயர்களும் **Y** நிரலில் நூலாசிரியர்களின் பெயர்களும் ஒழுங்கின்றித் தரப்பட்டுள்ளன.

| X | Y |
|---|---|
| (i) அல்-ஹாவி | A – உமர் கையாம் |
| (ii) மகாலத் பில் ஜபர் வல் முகாபலா | B – அல்-கிந்தி |
| (iii) ஜாமிஉல் பயான் | C – ஸகரிய்யா அர்-ராஸி |
| (iv) ரஸ்முல் மஃமுர் மினல் அர்ழ் | D – இப்னு ஸஅத் |
| (v) தபகாதுல் கபீர் | E – இப்னு ஜரீர் அத் தபரி |

மேலேயுள்ள நூல்களின் பெயர்களுக்கேற்ப நூலாசிரியர்களின் பெயர்கள் ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள விடையைத் தெரிவுசெய்க.
(1) A B D E C (2) B A C E D (3) B D A E C (4) C A B D E (5) D B C E A

**9.** இந்தியாவில் முஸ்லிம்களின் ஆட்சியை முன்னெடுத்த பல்வேறு அரச பரம்பரையினருள் 1526 – 1857 வரை இந்தியாவை ஆட்சிசெய்தவர்கள்
(1) லோடிகள் (2) ஐபக்குகள் (3) துக்லக்குகள்
(4) மொகலாயர் (5) கில்ஜிக்கள்

**10.** 'புதூஹுல் புல்தான்' எனும் பெயரில் புவியியல் துறையில் எழுதப்பட்டுள்ள நூலின் ஆசிரியர்
(1) அல்-குவாரிஸ்மி (2) அல்-பலாதூரி (3) இப்னு ஷஹ்ரயார்
(4) அல்-மஸ்ஊதி (5) அல்-இத்ரீஸி

**11.** பின்வருவோருள் அல்-குர்ஆனுக்கு விளக்கவுரை **எழுதாதவர்**
(1) ஸெய்யத் குதுப் (ரஹ்) (2) மௌலானா இல்யாஸ் (ரஹ்) (3) இமாம் இப்னுல் கஸீர் (ரஹ்)
(4) பக்ருத்தீன் அர்-ராஸி (ரஹ்) (5) மௌலானா மௌதூதி (ரஹ்)

**12.** முற்காலத்தில் முஸ்லிம்கள் பெரும்பான்மையாக வாழ்ந்த நாடுகள் பல்வேறு அரபுப் பெயர்களால் அழைக்கப்பட்டன. அவற்றுள் ஸ்பெயின், சிரியா ஆகிய நாடுகளைச் சுட்டும் அரபுப் பெயர்கள் முறையே
(1) அந்தலூஸ், ஷாம் (2) மிஸ்ர், மஃரிப் (3) அல்-ஹின்த், ஹபஷா
(4) மஃரிப், மிஸ்ர் (5) அந்தலூஸ், குத்ஸ்

**13.** இலங்கை முஸ்லிம்களின் தேசியப் பங்களிப்பை நினைவுகூரும் விதத்தில் முஸ்லிம் புத்திஜீவி ஒருவரின் பெயர் இலங்கையின் எந்தப் பல்கலைக்கழகத்தின் மாணவர் விடுதிக்குச் சூட்டப்பட்டுள்ளது ?
(1) கொழும்புப் பல்கலைக்கழகம் (2) தென்கிழக்குப் பல்கலைக்கழகம்
(3) யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் (4) கிழக்குப் பல்கலைக்கழகம்
(5) பேராதனைப் பல்கலைக்கழகம்

**14.** பின்வருவனவற்றுள் **பிழையான** கூற்றைத் தெரிவுசெய்க.
(1) செல்ஜூக்கிய சிற்றரசின் பிரதம மந்திரியாக நிழாமுல் முல்க் அவர்கள் பணியாற்றியுள்ளார்கள்.
(2) எம். எச். முஹம்மத் இலங்கைப் பாராளுமன்றத்தில் சபாநாயகராகப் பணியாற்றிய ஒருவராவார்.
(3) அகபா உடன்படிக்கை நபியவர்களுக்கும் மதீனா வாசிகளுக்கும் இடையே இடம்பெற்றதாகும்..
(4) இலங்கை முஸ்லிம்களின் ஆரம்பக் குடியேற்றங்கள் தென் மாகாணத்திலும் இருந்துள்ளன.
(5) சேர். பொன்னம்பலம் இராமநாதனின் 'இலங்கை முஸ்லிம்களின் இன வரலாறு' என்ற நூலுக்கான திறனாய்வு நூலை A. M. A. அஸீஸ் அவர்கள் எழுதியுள்ளார்.

**15.** 'அர் ரிஸாலா', 'இஹ்யா உலூமுத்தீன்' ஆகிய நூல்களின் ஆசிரியர்கள் முறையே
(1) இமாம் மாலிக், இமாம் ஹம்மாது
(2) இமாம் ஷாபிஈ, இமாம் அஹமத்
(3) இமாம் இபுனு தைமியா, இமாம் அஹமத்
(4) இமாம் ஷாபிஈ, இமாம் கஸ்ஸாலி
(5) இமாம் மாலிக், இமாம் அபூஹனீபா



**16.** ஜாஹிலிய்யாக் காலத்தில் 'அய்யாமுல் அரப்' என்பதனால் கருதப்பட்டதென்ன ?
(1) 'தாருன்னத்வா'வில் கலந்துரையாடல்கள் இடம்பெற்ற நாட்கள்
(2) கொண்டாட்ட தினங்கள்
(3) துக்க தினங்கள்
(4) போராட்ட நாட்கள்
(5) கஃபாவில் மக்கள் அணி திரண்ட நாட்கள்

[பக். 3 ஐப் பார்க்க

**17.** மாப்பிள்ளை லெவ்வை ஆலிம் அவர்கள் பிரதிநிதித்துவப்படுத்திய சூபி தரீக்கா யாது ?
(1) நக்ஷபந்திய்யா (2) ஜிஸ்திய்யா (3) காதிரிய்யா
(4) ஷாதுலிய்யா (5) அஸ்-ஸுஹ்ரவர்திய்யா

**18.** ஸிப்பீன் யுத்தத்தின் பின் கலீபா அலி (ரழி), முஆவியா (ரழி) ஆகிய இரு தரப்பினருக்கும் இடையேயான சமாதானப் பேச்சுவார்த்தையின்போது கலீபா அலி (ரழி) அவர்களின் பிரதிநிதியாகக் கடமையாற்றியவர்
(1) காலித் பின் வலீத் (ரழி) (2) அப்துல்லாஹ் பின் உமர் (ரழி)
(3) அபூ மூஸா அல்-அஷ்அரி (ரழி) (4) அபூ ஹுறைரா (ரழி)
(5) அப்துல்லாஹ் பின் ஸுபைர் (ரழி)

**19.** கலீபா மாமூன் அவர்களினால் அரசின் சமயக் கோட்பாடாகப் பிரகடனப்படுத்தப்பட்ட மு.'.தஸிலாக் கோட்பாட்டை பிற்காலத்தில் அவ் அந்தஸ்த்திலிருந்து நீக்கியவர்
(1) மு.'.தஸிம் (2) முஸ்தன்ஸிர் (3) முன்தஸிர்
(4) முதவக்கில் (5) அமீன்

**20.** தற்கால உலகின் பல பகுதிகளிலும் காணப்படும் நான்கு பிரதான த.'.வா இயக்கங்களைத் தோற்றுவித்தவர்களுள் ஒருவர் **அல்லாதவர்**
(1) மௌலானா மௌதூதி (ரஹ்) (2) முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் (ரஹ்)
(3) அபுல் ஹஸன் அலி நத்வி (ரஹ்) (4) இமாம் ஹஸனுல் பன்னாஹ் (ரஹ்)
(5) இல்யாஸ் (ரஹ்)

**21.** 'பைஅதுர் ரிழ்வான்' எனப்படுவது
(1) மக்கா வெற்றியின் பின்னர் நபியவர்கள் மக்கா குறைஷியருக்கு வழங்கிய பொது மன்னிப்பைச் சுட்டுகின்றது.
(2) முஸ்லிம்களால் ஜெருஸலம் வெற்றிகொள்ளப்பட்ட பின் முஸ்லிம்களுக்கும் கிறிஸ்தவர்களுக்குமிடையே இடம்பெற்ற சமாதான உடன்படிக்கையைச் சுட்டுகின்றது.
(3) நபியவர்களும் தோழர்களும் ஹுதைபிய்யா உடன்படிக்கையின்போது, உஸ்மான் (ரழி) அவர்களுக்காக உயிருள்ளவரை போராடுவோம் என்று உறுதிமொழி வழங்கியமையைக் குறிக்கின்றது.
(4) க.'.பா புனர்நிர்மாணத்தின்போது 'ஹஜருல் அஸ்வத்' என்ற கல்லை யார் வைப்பது என்ற விடயம் தொடர்பில் நபிகளார் தலைமையில் இடம்பெற்ற கலந்துரையாடலைச் சுட்டுகின்றது.
(5) சிப்பீன் யுத்தத்தின் பின் கலீபா அலி (ரழி), முஆவியா (ரழி) ஆகியோரின் பிரதிநிதிகள் சமாதானப் பேச்சுவார்த்தை மேற்கொண்ட இடத்தைச் சுட்டுகின்றது.

**22.** சுல்தான் ஸலாஹுதீன் ஐயூபி அவர்களால் சிலுவை வீரர்கள் வெற்றிகொள்ளப்பட்டு ஜெருஸலம் மீட்டெடுக்கப்பட்ட ஆண்டு
(1) 1187 (2) 1258 (3) 1453 (4) 1492 (5) 1924

● முஸ்லிம்களின் வரலாற்றில் முஸ்லிம், முஸ்லிம் அல்லாத ஆட்சியாளர்களுக்கிடையே இடம்பெற்ற யுத்தங்களின்போது முஸ்லிம் படையணிகளை வழிநடாத்திய படைத்தளபதிகள் சிலரது பெயர்கள் கீழே தரப்பட்டுள்ளன. அவற்றை அடிப்படையாகக் கொண்டு **23 – 27** வரையிலான வினாக்களுக்கு விடை தருக.

A – ஸஅத் பின் அபீ வக்காஸ் B – சுல்தான் ஸலாஹுதீன் ஐயூபி C – காலித் பின் வலீத்
D – தாரிக் பின் ஸியாத் E – அபூ உபைதா பின் ஜர்ராஹ் F – முஹம்மத் பின் காசிம்
G – அம்ர் பின் ஆஸ் H – முஸன்னா பின் ஹாரிதா I – சுல்தான் ஸைபுதீன் குதுஸ்

**23.** ஐன்ஜாலூத் என்ற இடத்தில் தாத்தாரியர்களை வெற்றிக்கொண்டவர்
(1) B (2) D (3) F (4) G (5) I

**24.** 'வகஅதுல் ஜஸ்ர்' போராட்டத்தில் காயமுற்று, பின்னர் மரணமடைந்த தளபதி
(1) A (2) C (3) E (4) G (5) H

**25.** 'சால்தியா', 'மிஸ்ர்' முதலான பிரதேசங்களை வெற்றிகொண்ட தளபதிகள் முறையே
(1) A, G (2) A, H (3) C, E (4) E, G (5) E, H

**26.** கலீபா வலீத் பின் அப்துல் மலிக் காலத்தில் கிழக்கிலும் மேற்கிலும் இஸ்லாமிய சாம்ராஜ்யத்தை விரிவுபடுத்திய இரு தளபதிகளும் முறையே
(1) B, E (2) C, E (3) D, F (4) D, I (5) F, G

**27.** உரோம, பாரசீகப் பிரதேசங்களை நோக்கிய ஆரம்பப் படையெடுப்பின்போது, வெவ்வேறு சந்தர்ப்பங்களில் படையணிகளுக்குத் தளபதியாகப் பணியாற்றியவர்
(1) A (2) C (3) E (4) G (5) H

[பக். 4 ஐப் பார்க்க

4726

**28.** நபி (ஸல்) அவர்கள், தன் தோழர்கள் சிலரை அவரவர் பெற்றிருந்த விசேட ஆற்றல்களுக்கேற்ப சிறப்புப் பெயர்களால் அழைத்துள்ளார்கள். அவர்களுள் 'ஹலால், ஹராம் பற்றி நன்கு அறிந்தவர்' என்ற சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்ட ஸஹாபி

(1) முஸ்அப் பின் உமைர் (ரழி)
(2) ஸைத் பின் ஸாபித் (ரழி)
(3) அபூ உபைதா அல்-ஜர்ராஹ் (ரழி)
(4) மஆத் பின் ஜபல் (ரழி)
(5) அபூதர் அல்-அப்பாரி (ரழி)

● பின்வருவன இஸ்லாமிய வரலாற்றில் முஸ்லிம்களுக்கு அரசியல் ரீதியாக வெற்றிகளையும் பேரழிவுகளையும் பதிவுசெய்த அண்ணளவான ஆண்டுகள் சிலவாகும். அவற்றை அடிப்படையாகக் கொண்டு **29, 30**ஆம் வினாக்களுக்கு விடை தருக.

A – 1187
B – 1258
C – 1453
D – 1492
E – 1857
F – 1924

**29.** முஸ்லிம்கள் கொன்ஸ்தாந்துநோபிளை வெற்றிகொண்ட ஆண்டும் முஸ்லிம் ஸ்பெய்ன் முஸ்லிம்களிடமிருந்து வீழ்ச்சியுற்ற ஆண்டும் முறையே

(1) A, B (2) B, C (3) C, D (4) C, F (5) D, C

**30.** இந்தியாவில் மொகலாயப் பேரரசின் வீழ்ச்சியும் துருக்கியில் உஸ்மானியப் பேரரசின் வீழ்ச்சியும் பதிவாகிய ஆண்டுகள் முறையே

(1) B, D (2) C, E (3) C, F (4) D, E (5) E, F

● **31** தொடக்கம் **35** வரையான ஒவ்வொரு வினாவிலும் இரண்டு கூற்றுகள் வீதம் தரப்பட்டுள்ளன. அக்கூற்றுகள் பற்றிய மிகப் பொருத்தமான தொடர்பைக் காட்டும் சரியான விடையினைப் பின்வரும் அட்டவணையிலுள்ள இலக்கம் (1), (2), (3), (4), (5) என்பவற்றிலிருந்து தெரிவுசெய்க.

| இலக்கம் | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| (1) | சரியானது. | சரியானது. |
| (2) | சரியானது. | பிழையானது. |
| (3) | பிழையானது. | சரியானது. |
| (4) | பிழையானது. | பிழையானது. |
| (5) | சரியானது. | முதலாம் கூற்றைத் தெளிவாக விளக்குகிறது. |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| **31.** | அலிகார் பல்கலைக்கழகம் இந்தியத் துணைக்கண்டத்தில் அமைந்துள்ளது. | கலீபா வலீத் பின் அப்துல் மலிக் காலத்தில் காதிஸிய்யாப் போராட்டம் இடம்பெற்றது. |
| **32.** | அறிஞர் சித்திலெவ்வை, வாப்பிச்சி மரிக்கார், ஒறாபி பாஷா ஆகியோர் கொழும்பு ஸாஹிராக் கல்லூரியின் ஸ்தாபகர்களாவர். | 'பதாவா ஆலம் கீரி' என்பது உஸ்மானிய ஆட்சியின்போது ஒன்றுதிரட்டப்பட்ட ஹதீஸ் விளக்கவுரை நூலாகும். |
| **33.** | நன்மையை ஏவி, தீமையைத் தடுத்தல் என்ற விடயம் முஸ்லிம்களில் படித்த வர்க்கத்தினர் மீது மட்டும் கட்டாயப்படுத்தப்பட்டுள்ளது. | குருதி நுரையீரல்களினூடாக இருதயத்தின் வலது பக்கத்திலிருந்து இடது பக்கத்தை அடைகின்றது என்ற கருத்தை மருத்துவ அறிஞர் இப்னு நபீஸ் முன்வைத்துள்ளார்கள். |
| **34.** | கலீபா முஃதஸிமின் பைதுல் ஹிக்மா, உமையாக் கால கல்வி மேம்பாட்டை உறுதிப்படுத்துவதற்கான சிறந்த உதாரணமாகும். | இலங்கையில் முஸ்லிம் தனியார் சட்டம் போர்த்துக்கேயர் காலம் முதல் அமுலில் இருந்து வருகின்றது. |
| **35.** | முகத்திமது இப்னு கல்தூன் முஸ்லிம்களின் வரலாற்றுத் துறைப் பங்களிப்புக்கான சிறந்த சான்றாகும். | அகீதா விடயங்களை, பகுத்தறிவின் துணைகொண்டு விளங்கிக் கொள்ள முற்பட்டமை முஸ்லிம்களிடையே சிந்தனைப் பிரிவுகள் ஏற்பட முக்கிய காரணமாயமைந்தது. |

[பக். 5 ஐப் பார்க்க

● பின்வருவன நபிகளார் மேற்கொண்ட சில உடன்படிக்கைகளின் நியதிகள் சிலவாகும். அவற்றை அடிப்படையாகக் கொண்டு **36** தொடக்கம் **38** வரையான வினாக்களுக்கு விடை எழுதுக.

A – ஒவ்வொருவரும் தத்தம் சமயத்தின்படி வாழும் உரிமையைப் பெறுவர்.
B – இரு தரப்பினரும் தாம் விரும்பிய மற்றொரு தரப்பினருடன் நேச உடன்படிக்கை செய்துகொள்ளும் உரிமை உண்டு.
C – அல்லாஹ்வுக்கு எதனையும் இணை வைப்பதில்லை.
D – இரு சாராருக்கும் இடையே பத்து வருட கால யுத்த நிறுத்தம் பேணப்படும்.
E – எதிரிகளிடமிருந்து மதீனா நகரைப் பாதுகாப்பது இரு சாராரதும் பொறுப்பாகும்.
F – குற்றம் செய்தவர் யாராக இருப்பினும் அவர் தண்டனைக்கு உட்படுத்தப்படுவார்.
G – நபிகளாரின் தலைமையை ஏற்றுக்கொண்டு அவரைப் பாதுகாத்தல் வேண்டும்.
H – கொலை, கொள்ளை போன்ற பாவச் செயல்களைத் தவிர்த்துக்கொள்ள வேண்டும்.

**36.** மேலுள்ளவற்றுள் அகபா உடன்படிக்கையில் உள்வாங்கப்பட்டுள்ள இரண்டு நியதிகளாவன
(1) A, C (2) A, G (3) C, F (4) C, G (5) E, H

**37.** மதீனா சாசனத்தில் காணப்படும் மூன்று நியதிகளாவன
(1) A, C, D (2) A, E, F (3) B, F, G (4) C, D, E (5) E, F, H

**38.** ஹுதைபிய்யா உடன்படிக்கையில் காணப்பட்ட இரண்டு விதிகளாவன
(1) A, B (2) B, D (3) B, H (4) D, E (5) D, G

**39.** இலங்கையின் வரலாற்றுப் புகழ்மிக்க மஸ்ஜிதுல் அப்ரார் என்ற பழைமையான மஸ்ஜித் அமைந்துள்ள இடம்
(1) புத்தளம் (2) கஹடோவிட்ட (3) பேருவலை
(4) வெலிகம (5) பலாங்கொடை

**40.** 'வணக்கத்துக்குரியவன் அல்லாஹ் ஒருவன் மட்டுமே' என்ற கொள்கைக்காக நிறுவப்பட்ட முதல் வணக்கத்தலம் கஅபா ஆகும். இருப்பினும் அங்கு பலதெய்வ வணக்கத்தைப் புலப்படுத்தும் சிலைகள் வைக்கப்பட்டிருந்தன. மக்காவில் சிலை வணக்கத்தை அறிமுகப்படுத்தியவர்
(1) அபூலஹப் (2) அம்ர் பின் ஹழ்ரமி (3) உபை பின் ஸலூல்
(4) மாலிக் பின் துகைரா (5) அமர் பின் லுஹை

**41.** நபியவர்கள் காலத்திலும் அவரின் மறைவின் பின்னரும் இஸ்லாத்தின் உயர்வுக்காக உழைத்த ஒரு பெரு மனிதரான ஹஸரத் அபூபக்ர் (ரழி) அவர்களுக்கு 'அஸ்-ஸித்தீக்' என்ற சிறப்புப் பெயர் வழங்கப்பட்டமைக்கான காரணம்
(1) நபியவர்களின் தூதை முதன்முதலாக ஏற்றுக்கொண்டமை ஆகும்.
(2) போலி நபிமார்களை முறியடித்து இஸ்லாத்தைப் பாதுகாத்தமை ஆகும்.
(3) இஸ்ராஉ, மிஃறாஜ் நிகழ்வை மக்கா காபிர்கள் ஏளனம் செய்தபோதும், "நபியவர்கள் அவ்வாறு கூறுகின்றாராயின் அது உண்மையாகவே இருக்கும்" என்று நம்பிக்கையுடன் குறிப்பிட்டமை ஆகும்.
(4) ஹிஜ்ரத்தின் போது, ஸவ்ர் குகையில் நபிகளாருடன் இருந்து அவர்களைப் பாதுகாத்தமை ஆகும்.
(5) இஸ்லாத்துக்காகவே வாழ்ந்து அதன் வழியிலேயே தனது அனைத்துச் சொத்துகளையும் தியாகம் செய்தமை ஆகும்.

**42.** மகாவம்சத்தில் குறிப்பிடப்படும் 'யோனாஸ்' என்ற பதம் அரேபியரைச் சுட்டுவதாக கருத்துத் தெரிவித்த வரலாற்றாய்வாளர்கள் குழுவில் **உள்ளடங்காதவர்**
(1) சேர். எமெர்ஸன் டெணான்ட் (2) கலாநிதி லோர்ணா தேவராஜா
(3) வில்ஹெய்ம் கெய்கர் (4) கலாநிதி ஆனந்த குருகே
(5) பேராசிரியர் சிறிமா கிறிபமுனே

**43.** சுமார் எட்டு நூற்றாண்டுகள் முஸ்லிம்களின் மேலாதிக்கத்தின் கீழ் இருந்துள்ள ஸ்பெயினின் அக்கால ஆட்சியாளரான அப்துர் ரஹ்மான் - I ஆல் நிர்மாணிக்கப்பட்ட மிகப் பிரபல்யமான மாளிகை
(1) அல்-ஹம்ரா (2) தாஜ்மஹால் (3) அஸ்-ஸஹ்றா
(4) குஸைர் அம்ரா (5) முன்யத் அர்-ருஸபா

[பக். 6 ஐப் பார்க்க

**44.** ஹதீஸ்களின் நம்பகத் தன்மையைச் சுட்டுவதற்குப் பயன்படுத்தப்படும் பல சொற்றொடர்களுள் 'முத்தபகுன் அலைஹி' எனப்படுவது
(1) அல்-குர்ஆன் வசனங்களை ஆதாரமாகக் கொண்டு ஹதீஸ்களை உறுதிப்படுத்துவதாகும்.
(2) இமாம்களான புஹாரி (ரஹ்), முஸ்லிம் (ரஹ்) ஆகிய இருவராலும் அறிவிப்புச் செய்யப்பட்டவையாகும்.
(3) இமாம் மாலிக் (ரஹ்) அவர்கள் பலம் மிக்கதாகக் கருதிய ஹதீஸ்களாகும்.
(4) நபிகளார் உரைத்ததாகக் கூறப்பட்ட போலி ஹதீஸ்களாகும்.
(5) நஸ் ஆதாரங்களோ பௌதிக ஆதாரங்களோ இன்றி அல்-குர்ஆன் வசனங்களுக்கு வழங்கப்படும் விளக்கங்களாகும்.

**45.** பின்வருவோரில் முஸ்லிம் ஸ்பெயினின் ஆட்சியாளர் **அல்லாதவர்**
(1) அப்துர் ரஹ்மான் - 1
(2) ஹகம் பின் ஹிஷாம்
(3) அல்-முஸ்தன்ஸிர்
(4) யூஸுப் பின் தஸ்ஹுப்
(5) இப்னுல் அஹ்மர்

**46.** கலீபா அமீனின் படுகொலையைத் தொடர்ந்து மஃமூன் கலீபாவாக நியமிக்கப்பட்ட போதிலும் அவர் நேரடியாக ஆட்சியில் ஈடுபடவில்லை. இக்காலப்பகுதியில் கலீபா மஃமூனின் அனுமதியுடன் அரசை வழிநடத்தியவர்
(1) பஸ்ல் பின் ஸஹ்ல்
(2) பஸ்ல் பின் ரபீஆ
(3) நிழாமுல் முல்க்
(4) ஹஸன் பின் ஸஹ்ல்
(5) இமாம் அலி அர்-ரிழா

**47.** 'துன்னூரைன்', 'தாதுன்னிதாகைன்' எனும் சிறப்புப் பெயர்களால் அழைக்கப்பட்ட இருவரும் முறையே
(1) அலி (ரழி), பாத்திமா (ரழி)
(2) ஸுபைர் (ரழி), ஸுமையா (ரழி)
(3) உஸ்மான் (ரழி), அஸ்மாஃ பின்த் அபீபக்ர் (ரழி)
(4) பிலால் (ரழி), ஹப்ஷா (ரழி)
(5) ஸஃது பின் உபாதா (ரழி), உம்மு ஸுலைம் (ரழி)



**48.** பின்வருவனவற்றுள் நான்கு சொற்கள் ஏதோ ஒரு வகையில் இரண்டு தலைப்புகளில் ஒன்றுடனொன்று பொருந்துவதுடன் ஒன்று மட்டும் எதனோடும் பொருந்துவதில்லை. **பொருந்தாத** அச்சொல்லைத் தெரிவுசெய்க.
(1) அல்-மதன்
(2) அல்-முதவாதிர்
(3) அல்-தஸ்கியா
(4) அத்-தக்லீத்
(5) அத்-தரீகா

**49.** இப்னுல் முக்லா, இப்னுல் பவ்வாப் ஆகிய கலைஞர்கள் சிறப்புற்றிருந்த துறை
(1) இசை
(2) ஓவியம்
(3) எழுத்தணி
(4) கவிதை இலக்கியம்
(5) கட்டடக்கலை

**50.** இலங்கையில் முஸ்லிம்களுக்கான தனியார் சட்டத்தை ஏற்புடையதாக்குவதில் குறிப்பிடத்தக்க பங்களிப்பை வழங்கிய ஆங்கிலேயப் பிரமுகர்
(1) சேர். அலெக்சாண்டர் ஜோன்ஸன்
(2) பிரெட்ரிக் நோர்த்
(3) போல்க்
(4) ஜோன் டொயிலி
(5) ரொபர்ட் பிரௌன்றிக்

***

AL/2016/47/T-II





අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2016 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2016 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2016

| | | | |
|---|---|---|---|
| ඉස්ලාම් ශිෂ්ටාචාරය II<br>இஸ்லாமிய நாகரிகம் II<br>Islamic Civilization II | 47 T II | | පැය තුනයි<br>மூன்று மணித்தியாலம்<br>*Three hours* |

**அறிவுறுத்தல்கள் :**

* பகுதி **I** இலிருந்து **இரண்டு** வினாக்களையும் பகுதி **II** இலிருந்து **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.
* ஒவ்வொரு வினாவுக்கும் **20** புள்ளிகள் உரித்தாகும்.

## பகுதி I

**1.** (i) உரோமர்களுடன் முஸ்லிம்கள் போரிட்டமைக்கு ஏதுவான **நான்கு** காரணிகளைக் குறிப்பிடுக.

(ii) ஸ்பெயினை முஸ்லிம்கள் வெற்றிகொள்ள ஏதுவாகிய காரணிகள் **நான்கினைக்** குறிப்பிடுக.

(iii) துருக்கியில் இஸ்லாமிய கிலாபத் வீழ்ச்சியுற்றதால் முஸ்லிம் உம்மத்துக்கேற்பட்ட பாதிப்புகள் **இரண்டினைச்** சுருக்கமாக விளக்குக.

(iv) உமையாக் கிலாபத்தை மறுசீரமைப்பதற்கு கலீபா உமர் பின் அப்துல் அஸீஸ் (ரஹ்) எடுத்த முயற்சிகளைச் சுருக்கமாக விவரிக்குக.

(v) அப்பாஸிய கிலாபத்தை ஸ்திரப்படுத்துவதற்கு கலீபா அபூஜ.்.பர் அல்-மன்சூர் எடுத்த நடவடிக்கைகளை விவரிக்குக.

**2.** (i) இஸ்லாத்துக்கு முற்பட்ட கால இலங்கை-அரேபிய பழைமையான தொடர்பை உறுதிப்படுத்துவதற்கான ஆதாரங்கள் **இரண்டினைக்** குறிப்பிடுக.

(ii) ஹிஜ்ரி முதல் நூற்றாண்டிலேயே இலங்கையிலும் இஸ்லாம் அறிமுகப்படுத்தப்பட்டமைக்கான ஆதாரங்கள் **இரண்டை** எழுதுக.

(iii) இலங்கையில் ஆரம்ப முஸ்லிம் குடியேற்றங்கள் கரையோரங்களில் அமைய ஏதுவான காரணங்கள் **நான்கினைத்** தருக.

(iv) இலங்கை முஸ்லிம்களிடையே காணப்படும் தென்னிந்தியக் கலாசார செல்வாக்கை **நான்கு** உதாரணங்களுடாக விளக்குக.

(v) கொழும்பு ஸாஹிராக் கல்லூரியின் வளர்ச்சிக்கு கலாநிதி T. B. ஜாயா அவர்கள் ஆற்றிய பங்களிப்பை விபரிக்குக.

**3.** (i) தௌஹீதின் பிரதான **இரண்டு** பிரிவுகளையும் அவற்றுள் உள்ளடங்கியுள்ள **மூன்று** முக்கிய விடயங்களையும் குறிப்பிடுக.

(ii) முஸ்லிம்களிடையே ஆரம்ப காலத்தில் தோற்றம் பெற்ற சமய சிந்தனைப் பிரிவுகள் முஸ்லிம் 'உம்மா'வில் ஏற்படுத்திய **நான்கு** பாதிப்புகளைக் குறிப்பிடுக.

(iii) மனித வாழ்வை நெறிப்படுத்த ரிஸாலத் ஏன் தேவைப்படுகிறது என்பதைத் தெளிவுபடுத்துக.

(iv) மறுமை பற்றிய நம்பிக்கை மனித வாழ்வில் ஏற்படுத்தும் தாக்கங்கள் **நான்கினைத்** தருக.

(v) மறுமை ஏற்படும் என்பதற்காக நபியவர்களால் எதிர்வுகூறப்பட்ட **நான்கு** நிகழ்வுகளை விளக்குக.

## பகுதி II

**4.** (i) குடும்ப வாழ்வு பற்றிய அல்-குர்ஆனின் போதனைகள் **ஐந்தை** விளக்குக.

(ii) இஸ்லாமிய நாகரிகத்தைக் கட்டியெழுப்புவதில் ஸுன்னாவின் பங்களிப்பை ஆராய்க.

**5.** (i) முஸ்லிம்கள் வானியல் துறையில் ஈடுபடுவதற்கு வழியமைத்த காரணிகளை விளக்குக.

(ii) வானியல் அறிஞர்களான அல்-குவாரிஸ்மி, அல்-பிருனி ஆகியோரின் வானியற்றுறைக்கான பங்களிப்பை விவரிக்குக.

[பக். 2 ஐப் பார்க்க

**6.** (i) கலீபா அப்துல் மலிக் பின் மர்வான் எதிர்கொண்ட சவால்களையும் அவர் அவற்றை வெற்றிகொண்ட முறைகளையும் விவரிக்குக.

(ii) கலீபா வலீத் பின் அப்துல் மலிக் கால இராச்சிய வியாபகம் பற்றி விளக்குக.

**7.** (i) ஹதீஸ்களைப் பாதுகாப்பதற்கு தாபிஈன்கள் காலத்தில் மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளையும் அவற்றின் விளைவுகளையும் பற்றி விவரிக்குக.

(ii) ஹிஜ்ரி 2 - 4ஆம் நூற்றாண்டு வரையிலான காலம் 'பிக்ஹுக்கலையின் பொற்காலம்' எனக் கருதப்படுவதற்கான நியாயங்களை முன்வைக்குக.

**8.** (i) 'நாகரிகம்' எனும் பதத்தை விளக்கி, இஸ்லாமிய நாகரிகம் ஏனைய நாகரிகங்களிலிருந்து வேறுபடும் விதத்தை விளக்குக.

(ii) இஸ்லாமிய நாகரிகம் நலிவடைந்தமைக்கான **ஐந்து** காரணங்களை விளக்குக.

❊ ❊ ❊